*Nam nāṭu*

*Malar 2, itaḻ 183*

*January 13, 1955*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: மார்கழி 29உ வியாழன் (13—1—55) ★ ★ வெளியூர்: மார்கழி 30உ வெள்ளி (14—1—55) [இதழ் 103

## தேனெழுகப் பேசுகிருர் தேபர்!

"இப்போதைய வர்க்கச் சுரண்டல் அடுத்த பத்து ஆண்டுகளில் நீங்கினுலொழிய இந்தியா, தனது லட்சியத்தை அடைந்து விட முடியாது. காந்தியார் தீர்க்க விரும்பின சமுதாயப் பிரச்சினைகளையெல்லாம் நாம் தீர்த்துவிட்டோம் என்று யாராவது சொல்ல முடியுமா," என்று காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தேபர் பம்பாயில் கூறியுள்ளார்.

"தற்போது நிலவி வரும் சமுதாய அமைப்பு நீடித்தவரு மானுல், இந்தியா ஒருபோதும் ஒரு சோஷலிச சமுதாயமாக மாற முடியாது. எனவே, இந்தியாவில், மனமாற்றத்தின் மூலம் இந்தப் புதுமை நோக்கு ஏற்பட்டு, சரியானமுறையில் தனது லட்சியத்தை அடைய வேண்டும்," என்று அவர் மேலும் குறிப்பிட்டிருக்கிருர்.

# 'பணமா? இந்தியப் பேரரசு ஒதுக்கி உள்ளதே!'

## 'பயன்படுத்திக்கொள்ள உங்களுக்குத்தானே ஆர்வமில்லை!'

### மதுராமங்கலம் மக்களைச் சீறுகிருர் துணை மந்திரி அழகேசன்

மதுரமங்கலம், ஜன. 12—

"கிராம மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதற்காக இந்தியப் பேரரசு ஏராளமாகப் பணத்தை ஒதுக்கிவைத்திருக்கிறது. அதிலிருந்து உங்களுடைய உயர்நிலைப் பள்ளி கோரிக்கையை பூர்த்தி செய்து கொள்ளலாம். ஆனுல் அத்தொகையை, மக்கள்தான், கூடும்வகையில் உயர்ந்த பட்சமாக உபயோகப்படுத்திக் கொள்ள வில்லை. உட்பகுதி முன்னேற்றப் பணிக்காகச் செலவாகும் தொகையில்—பாதித் தொகையை இந்தியப் பேரரசு கொடுக்கத் தயாராக இருக்கிறது. மீதமுள்ள பாதிச் செலவை, பணமாகவாவது உழைப்பாகவாவது கிராம மக்கள் கொடுத்து உதவ முன்வர வேண்டும். ஆனுல் அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படுகின்ற அளவில், கிராம மக்கள், ஆர்வம் காட்டுவது கிடையாது. மாநில அரசாங்கத்துடையவும், தர்ம சிந்தனையுடையவர்களுடையவும் உதவியுடன், சாலைகளை அமைப்பதிற்காகும் செலவில் ஒரு பகுதியை, இந்தியப் பேரரசு ஏற்றுக்கோள்ளத் தயாராக உள்ளது; ஆனுல் இவ்வசதியை நன்கு பயன்படுத்திக் கோள்ள கிராம மக்கள் முன்வருவதில்லை."

—மதுராமங்கல மக்கள், தங்கள் தேவைகளைத் தெரிவித்தபோது, மேற்குறிப்பிட்டுள்ள பதிலை மத்திய துணை மந்திரி அழகேசன் அளித்துள்ளார்.

தங்கள் கிராமத்தில் ஒரு உயர் நிலைப் பள்ளியும், அண்டையிலுள்ள கிராமங்களில் தொடக்கப் பள்ளிகளும், அருகில் உள்ள சுங்குவார் சத்திரத்தில் ஒரு பிரசவ விடுதியையும், பம்பைவாய்க்காலைப் பழுது பார்க்கவும், மதுர மங்கல கிராம மக்கள், துணை மந்திரி அழகேசனையும், மந்திரி பக்தவத்சலத்தையும் கேட்டுக் கொண்டனர். அதற்குத் தான் மேற்கண்ட பதிலை துணை மந்திரி கிராம மக்கள் முன் வீசி எறிந்துள்ளார்.

அதே போக்கில், மந்திரி பக்தவத்சலமும் பேசி இருக்கிருர். உயர்நிலைப் பள்ளி வேண்டுமெனக் கூறும் மதுரமங்கல மக்கள்: ரூ 50,000 கொடுத்தால், பள்ளிக் கூடம் ஏற்படுத்துவதாக மந்திரி பக்தவத்சலம் கூறினுர்.

மேற்படி பாராட்டுக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த சென்னை மேல் சபை உறுப்பினரான டி புருஷோத்தமனுர் ரூ. 50,000 வசூலித்துத் தர மதுரமங்கலம் மக்கள் தயாராக இருப்பதாகக் குறிப்பிட்டார்.

## காந்தி ஆசிரம மாணவர் கண்ணிழந்தார்

### ஆசிரியர் அக்கினிதிராவகம் விசினுராம்

உசிலம்பட்டி, ஜன. 12—

கல்லுப்பட்டியில் உள்ள காந்தி ஆசிரமத்தில் படிக்கும் சுப்பிரமணியம் என்ற மாணவர் தமது அறையில் உறங்கிக் கொண்டிருந்த போது அவரது முகத்தில் அக்கினி திராவகம் வீசப்பட்டு கண்பார்வை இழந்துவிட்டார் என்று ஒருசெய்தி கூறுகிறது.

போலீசார், விசாரணைக்குப் பிறகு, அப்பள்ளியில் தோல்பதனிடும் தொழிற்சாலை ஆசிரியராகப் பணிபுரியும் செல்வராஜ் என்பவரைக் கைது செய்தனர் எனவும் தெரியவருகிறது.

## மூடுவிழா!

திருப்பூர், ஜன. 10—

திருப்பூர் நகரசபையினர் நடத்தி வருகிற நான்கு முதியோர் கல்விச் சாலைகளையும் மூடிவிட முடிவு செய்துள்ளனர் எனத் தெரிகிறது.

இதற்குக் காரணம் கடந்த அக்டோபர் முதல் இந்தப் பள்ளிகளுக்கு சர்க்கார் அளித்துவந்த உதவிகளை நிறுத்திவிட்டதே யாகும் என்றும் தெரிகிறது.

## 'மதம்—கடவுள் பெயரால் நடைபெறும் சுரண்டலை சகியோம்'

### 'புரோகிதர்களை எதிர்ப்போம்'

பொதுவுடைமையர் ஆட்சிகுறித்து சுந்தரையா தகவல்

கடப்பை, ஜன. 11—

"ஆந்திர அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பு எங்களுக்குக் கிட்டுமானுல், நாங்கள் மதத்தில் குறுக்கிடமாட்டோம். ஆனுல் மதம்—கடவுள் பெயரினுல் புரோகிதர்கள் நடத்திவரும் சுரண்டலை நாங்கள் ஒருக்காலும் சகித்துக்கொள்ளமாட்டோம்."

—இவ்வாறு, மக்கள் சபை உறுப்பினரும், கம்யூனிஸ்டு கட்சித் தலைவருமான பி. சுந்தரையா அவர்கள் தேர்தல் பிரசாரத்தில் குறிப்பிட்டார்.

இப்பொழுதுள்ள ஐதராபாத் மாநில அமைப்பை உடைத்து, 'விசால ஆந்திரம்' அமைப்பது அவசியமானது என்றும், அதற்காகக் கம்யூனிஸ்டு கட்சி போராடுமென்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

குடிமக்களுக்கு தரிசு நிலங்களைச் சமமாகப் பகிர்ந்தளித்தல், பேச்சுரிமை எழுத்துரிமை வழங்கல், 16 வயது வரை இலவசக் கல்வி போதனை, அரசாங்க அதிகாரிகளிடை இலஞ்சப் பழக்கத்தை ஒழித்தல், ஆயுர்வேத மருத்துவத்தை வளர்த்தல், சம்பளக் குழுவின் சிபாரிசுகளை அமுல் நடத்தல், ஆகியவற்றை தங்கள் ஆட்சியில் செய்யக் காத்திருப்பதாக, சுந்தரையா தனது தேர்தல் பேச்சில் அறிவித்துள்ளார்.

## இணைக்க முயற்சி?

திரு—கொச்சி மாநிலத்தோடு இணைந்துள்ள தமிழ் தாலுகாக்களில் ஒன்ருன செங்கோட்டை தாலுகாவை சென்னை மாநிலத்துடன் இணைத்துவிட முயற்சிகள் நடைபெற்று வருகிறதாம்.

வெட்டுக் கிளி ஒழிப்பு நடவடிக்கைகளுக்காக இந்திய சர்க்கார் 1953—54-ல் சுமார் 21 லட்சம் ரூபாய் செலவழித்தனர்.

## கொடும்பாவி கொளுத்தப்படவில்லை

### சென்னை காங்கிரஸ் பத்திரிகைகள் பொய்க் கூற்று

### பெரியார் விளக்கம்

சிங்கப்பூர், ஜன. 11—

திராவிட கழகத் தலைவர் பெரியார் ஈ. வே. ராமசாமி அவர்களின் கொடும்பாவி ஒன்று பர்மாவில் எரிக்கப்பட்டதாக சென்னைப் பத்திரிகைகளில் வெளியான செய்தி தவறு என்று தெரிகிறது.

"இச் செய்தி தவருனதாகும்," என்று பெரியார் மறுத்தார்.

பெரியாரது பேச்சினுல் பர்மாவில் கலவரம் ஏற்பட்டது என்ற செய்தி வெளியானதும் தவறு என்று அவர் தெரிவித்தார்.

மலேயாவாழ் தமிழர்கள் மலேயா குடிமக்களாகப் பதிவு செய்துகொள்ளவேண்டும் என்று அவர் தமிழ் மக்களிடையே பேசுகையில் கேட்டுக்கொண்டார் என்று தெரிகிறது.

## ஆவடி மாநாட்டின் எதிரொலி!

### சென்னையில் விறகு விலை ஏற்றம்

சென்னை நகரில் தற்போது ஏற்பட்டிருக்கும் விறகு பஞ்சத்தை உடனடியாக நிவர்த்திக்க இயலாது என்று தெரிகிறது.

ஆவடியில் நடைபெறும் காங்கிரஸ் மாநாட்டிற்கு 1000 டன்னுக்கு மேல் சவுக்கு மரங்கள் வாங்கப்பட்டதால் சென்னையில் விறகு பஞ்சம் ஏற்பட்டதாம்.

ஆவடியில் காங்கிரஸ் மாநாடு நடைபெறுவதை முன்னிட்டு அரக்கோணம் வழியாக சென்னைக்கு 'கூட்ஸ்' வண்டிப் போக்குவரத்தை பாதிக்கு மேல் ரயில்வே அதிகாரிகள் குறைத்துவிட்டார்களாம்.

சென்னைக்கும், அரக்கோணத்திற்கும் இடையே பிரயாணிகள் வண்டிப் போக்குவரத்து அதிகமாக இருப்பதால், 'கூட்ஸ்' வண்டிகள் போக்குவரத்தைக் குறைக்கும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறதாம்.

ஆந்திரப் பகுதியிலிருந்தே சென்னைக்கு ஏராளமான விறகு வருவதால், அப்பகுதியில் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்யுமாறு ரயில்வே அதிகாரிகளை சர்க்கார் கேட்டுக்கொண்டிருக்கிறது.

## பறிபோயிற்று!

கர்நாடக மாநில பிரதேச காங்கிரஸ் குழுவின் தலைவராக பீஜப்பூரைச் சேர்ந்த சி. ஜே. அம்பிலி என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிருர். இவர், பம்பாய் சட்டசபை உறுப்பினராவார். தலைவர் தேர்தலில் அம்பிலிக்கு 37 வாக்குகளும், அவரை எதிர்த்துப்போட்டியிட்ட நிஜலிங்கப்பாவுக்கு 32 வாக்குகளும் கிடைத்தன.

இதுவரையிலும் கர்நாடக பிரதேச காங்கிரஸ் குழு தலைவர் பதவிக்கு எப்பொழுதும் போட்டியே நடைபெற்றது கிடையாது என்பதும், கடந்த 1946-ம் ஆண்டு முதற்கொண்டு இந்த 9 ஆண்டுகளாக, நிஜலிங்கப்பாவே ஒவ்வொரு ஆண்டும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்பதும் இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தேசிய வருமானத்துக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள இலட்சிய அளவு திட்டத்தின் மூன்ருவது ஆண்டிலேயே எய்தப்பட்டுவிட்டது.

## முதலாளிகளின் சுயநலத்தை முதலாளியே விளக்குகிருர்!

### ஏற்றுமதியாகும் ஆலைத்துணியின் தரக்குறைவு!

உண்மையைக் கக்குகிருர் கஸ்தூரிபாய் லால்பாய்

"துணி ஏற்றுமதியில் இந்தியா குறிப்பிடத்தகுந்த அளவில் முன்னேறி இருந்தபோதிலும், துணியின் தரம் திருப்திகரமானதாக இருக்கவில்லை. பருத்தித்துணி ஏற்றுமதியில் இந்தியா உலகிலேயே இரண்டாவதாக இருந்த போதிலும், உலகத் தரத்தின் நிலைப்படி, இந்திய ஏற்றுமதித் துணியின் தரம் திருப்தியளிக்கக்கூடியதாக இல்லை."

—இவ்வாறு, இந்திய ஏற்றுமதித்துறையின் தரக்குறைவை சேத் கஸ்தூரிபாய் லால்பாய் என்ற பெரும் ஆலை முதலாளி குறிப்பிட்டுள்ளார்.

"கடந்த நூற்றாண்டின் மத்தியிலேயே இந்தியாவில் நெசவாலைத் தொழில் துவங்கப்பட்டிருந்தும்கூட, அதற்குத் தேவைப்படும் இயந்திரங்களை உற்பத்தி செய்யும் தொழில் இங்கு துவங்கப்படாதது வருந்தத்தக்கது.

இக்குறைபாட்டிற்கு முக்கியக் காரணமாக இருந்தது, அந்தக் காலத்தில் நெசவாலைத் தொழிலை இங்குத் துவங்கினவர்களின் சுயநல நோக்கேயாகும்.

ஆனுல் கடந்த எழு ஆண்டுகளாக இங்கிலாந்தில் உள்ள நெசவாலை இயந்திர உற்பத்தியாளர்களுடன் கூட்டாகச் சேர்ந்து, இங்கும் அத்தொழில் நடத்தப்பட்டு வருகிறது.

முதல் உலகப் போருக்கு முன் இந்தியாவிலிருந்து ஒவ்வொரு ஆண்டும் மொத்தத்தில் 3,197,000,000 கெஜம் துணி ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. இப்பொழுது ஆண்டு ஒன்றுக்கு 670,000,000 கெஜம் துணி ஏற்றுமதி செய்யப்பட்டு வருகிறது.

1913-ல் 1,214,000,000 கெஜமாக இருந்த ஆலைத் துணி உற்பத்தி 1953-ல் 4,940,000,000 கெஜம் துணியாக உயர்ந்திருக்கிறது.

## வேலை நிறுத்தம் பரவுகிறது

கல்கத்தா, ஜன. 3—

கடந்த ஐந்து தினங்களாக கல்கத்தா துறைமுகத் தொழிலாளர்கள் மேற்கொண்டு வருகின்ற வேலை நிறுத்தம் தற்போது, பீகார், அசாம் பகுதிகளையும் பாதித்துவிட்டிருப்பதாகச் செய்திகள் கூறுகின்றன.

இன்று இரவிலிருந்து 24 மணி நேரத்துக்கு ஒரு அடையாள வேலை நிறுத்தத்தை மேற்கொள்ள ஒரு கூட்டுக் கம்பெனியைச் சேர்ந்த 10,000 படகுக்காரர்கள் முடிவு செய்திருக்கின்றனர் என்று கூறப்படுகிறது.

## கண்துடைப்பல்லவே!

பம்பாய் மாநில மாணவர்களனைவரும் ஒரே மாதிரியான உடை ('யூனிபாரம்') அணிந்துகொண்டு வரும் பழக்கத்தை இடைத்தரக் கல்விச்சாலைகளில் அமுலுக்கு கொண்டுவரவேண்டுமென, பம்பாய் சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனராம்.

இதற்கான காரணம் பற்றி பம்பாய் சர்க்கார் குறிப்பிடுகையில், சகோதரத்துவத்தை வளர்க்கவும், செல்வந்தன்—ஏழை என்ற பாகுபாட்டைப் போக்கவும் இம்மாதிரியான 'யூனிபாரம்' உடையணிவது வழிகோலுவதோடு, அது மலிவானதாகவுமிருக்கிறது என்று தெரிவித்திருக்கிறது.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர்..அண்ணதுரை
சென்னை 13—1—1955 வியாழன்

# பொங்கலோ, பொங்கல்!

திராவிடமெங்கும் இன்ப ஒலி கேட்கிறது!

அனைவர் உள்ளங்களிலும் மகிழ்ச்சி பொங்கும் நாள்!

திராவிட மக்களின் பண்புக்கு அறிகுறியான ஒரே ஒரு விழா.

வேதனை நினைவுகள் அன்று இருக்காது. எத்தனையோ தொல்லைகள் இருந்தாலும், உள்ளத்திலே அன்று அவைகளுக்கு இடமில்லை.

பருவ மழை பெய்யாது விளைவு குன்றிப்போயிருந்தாலும், பாராளும் சர்க்காரின் பாராமுகப் போக்கினால்—பூச்சிகளின் கொடுமையால் பயிர்களுக்குச் சேதம் விளைந்திருந்தாலும், இன்று, ஏர் பிடிக்கும் அந்த உத்தமன் உள்ளத்திலே மகிழ்ச்சி பொங்குகிறது!

'இழந்த வாழ்வை மீண்டும் பெற முடியுமா?'—என்று ஏங்கி நின்ற நெசவுத் தொழிலாளர்களின் உள்ளத்திலும் மகிழ்ச்சி பொங்குகிறது—பேரானந்தம் இல்லையென்றாலும், பூரிப்பு காணப்படுகிறது அவர்கள் உள்ளத்திலே—சோகம் காணப்பட்டாலும் அவர்கள் முகத்திலே புதியதோர் பொலிவு தோன்றும். திராவிட முன்னேற்றக் கழகம், அவர்களது வாழ்வின் உயர்வுக்கு தன்னால் இயன்ற உதவி செய்ததை எண்ணி எண்ணிப் பெருமிதம் கொள்ளும்.

ஆலையில் சங்கு ஊதியதும்—கதிரவன் உயர்வுக்கு முன்பு கண்களைக் கசக்கியவண்ணம், ஆலை நோக்கிச் செல்லும் தொழிலாளியின் உள்ளம் இன்று மகிழ்ச்சியில் திளைத்து நிற்கும்.

ஆம்! ஒரு காலமிருந்தது—பொங்கற் புதுநாள், 'சங்கராந்தி' என்று அழைக்கப்பட்ட காலம் அது! திராவிடர்களின் வாழ்வில், 'மதம்' என்ற மாயையைப் புகுத்திய ஆரியம், பொங்கற் புதுநாளை மதச்சாயம் பூசி, உலகுக்குக் காட்டிய காலம் அது!

இன்று, பொங்கற் புதுநாள்—தைத் திருநாள்—திராவிடர் திருநாளாகிவிட்டது.

உலகில் மிகப் பெரிய நாகரீகத்தை வளர்த்த திராவிட இனத்தின் விழாவாக இன்று பொங்கல் திருநாள் விளங்குகிறது.

இன்று, குமரியில் வாழும் மனிதன், சென்னையில் வாழும் தன் நண்பனுக்கு வாழ்த்து அனுப்பும் நிலையைக் காண்கிறோம்.

தனது உழைப்பின் பலனால் குன்றெனக் குவிந்துள்ள நெல்மணிக் குவியல்களைக் கண்ணுறும் உழவன், ஆலையிலே பணியாற்றும் தொழிலாளி, அலுவலகத்திலே ஊழியம் செய்யும் மக்கள் அனைவரும் இன்று மகிழ்கிறார்கள்.

பொங்கற் புதுநாளன்று திராவிடப் பெருங்குடி மக்கள் தாங்கள் பிறந்த இனத்தின் பெருமையை எண்ணி எண்ணி மகிழ்வார்கள்.

கடாரம் வென்றவன்—ரோம் நகரில் வாணிபம் செய்தவன் தனது இனத்தோன்—என்று நினைக்கும்போது, அந்த வாழ்வு மீண்டும் எப்போது வருமென்று அப்பெருங்குடி மக்கள் எண்ணுகிறார்கள்—ஏக்கத்தோடு அல்ல—நம்பிக்கையோடு!

ஆம்! இன்று, திராவிட மக்களின் உள்ளத்திலே புதியதோர் நம்பிக்கை பிறந்திருக்கிறது—நாம் பிறந்த நாடு, நமது முன்னோர் ஆண்ட நாடு, இன்று அடிமைப்பட்டுக் கிடக்கும் நாடு நிச்சயமாக விடுதலை பெறப்போகிறது—என்ற நம்பிக்கை அவர்களின் உள்ளத்திலே உறுதிபெற்று நிற்கிறது.

'வளர்க, அந்த நம்பிக்கை' என்று, திராவிட முன்னேற்றக்கழகம், இந்த நாட்டு மக்களைப் பார்த்துச் சொல்கிறது.

ஆண்டுதோறும் நடைபெறும் பொங்கற் புது நாள்—திராவிடர் திருநாள் நம்மிடையே உள்ள நல்ல நம்பிக்கையை வலியுறுத்திய வண்ணம் இருக்கிறது.

பொங்கற் பெருநாளன்று இதுவரை நாம் செய்துள்ள பணிகளை எண்ணி மகிழ்வோம்! அடுத்து நடைபெறப்போகும் விடுதலைப் போரிலே நமது பங்கு என்ன என்பதை இந்த நன்னாளிலே உறுதிப்படுத்திக் கொள்வோம்!

பொங்கற் புது நாள் நமது விழா—நாம் மகிழ வேண்டிய நன்னாள்; இத்திருநாளைவிட முக்கியமானதோர் திருநாள்—திராவிடம் ஆவலுடன் எதிர்நோக்கியிருக்கும் திருநாள் ஒன்று உண்டு; அந்த நாள்—நாம் விடுதலை பெறும் நாள்! 'திராவிட நாடு திராவிடருக்கே' என்று அமையும் நாள்! நமக்கென்று ஒரு தனி நாடு உருவாகும் நாள்! அன்று தான் நமது விடுதலை நாள்!

ஆண்டுதோறும் வந்து செல்லும் பொங்கற் புது நாள், நமது 'விடுதலை நாள்' சீக்கிரமே வரவிருக்கிறது என்ற நம்பிக்கையை நமக்கு ஊட்டிய வண்ணம் உள்ளது.

திராவிடப் பெருங்குடி மக்களின் சொந்தத் திருநாளாகிய இன்று, அனைவருக்கும் எங்கள் நல்வாழ்த்துக்கள்.

உங்கள் உள்ளத்தில் மட்டுமல்ல—இந்த நாடு முழுவதும் மகிழ்ச்சி பொங்கட்டும்—என்று கூறி, உங்கள் வாழ்வின் நலனை விரும்பும் திராவிட முன்னேற்றக் கழகம், உங்கள் மகிழ்ச்சியில் அரியதோர் பங்கு கொள்கிறது.

## இந்தியாவில் இயங்கும் முதல் காகித ஆலை

நாகபுரி, ஜன. 11—

இந்தியாவிலேயே முதன் முதலாகப் பத்திரிகைகளுக்கான காகிதத்தை தயார்செய்வதற்கான ஆலை ஒன்று நேற்று வேலை செய்ய ஆரம்பித்தது.

இந்த ஆலை ஆண்டொன்றுக்கு 30,000 டன் பத்திரிகைக் காகிதங்களைத் தயாரிக்கும் என்றும், இந்தியாவில் தேவைப்படும் பத்திரிகைக் காகிதத்தில் இத்தொகை 3-ல் 1 ஆகும் என்றும், இந்த ஆலையினால் இந்திய சர்க்காருக்கு ஆண்டு தோறும் ரூ. 2 கோடி மிச்சம் என்றும் கூறப்படுகிறது.

## வான வெளியில் செயற்கை நிலா!

### பூமிக்கு 190 மைல் உயரத்தில் செயலாற்றும்!

### 'காஸ்மிக்' கிரணங்கள் பற்றிய தகவல்களை பூமிக்கு அனுப்பும்!

இன்னும் இரண்டாண்டு காலத்திற்குள் அமெரிக்கா, செயற்கைச் சந்திரன் ஒன்றை உருவாக்கி, பூமியைச் சுற்றிவர, வான வீதியில் அதை அனுப்ப முடியும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

நெடுந்தொலைவு பறக்கும் வெடி விமானத்தைக் கட்டுவதற்குப் போதுமான செலவில், தற்போதைய எஞ்சினீயரிங் அறிவைக் கொண்டே இன்னும் இரண்டாண்டுகளில்—அதாவது 1957-ம் ஆண்டின் இறுதிக்குள் செயற்கைச் சந்திரனை உருவாக்கி வான வெளியில் மிதக்க விட்டுவிடலாம் என்று அமெரிக்க விஞ்ஞானி ஒருவர் குறிப்பிட்டுள்ளார்.

அந்தச் செயற்கைச் சந்திரன் பற்றி அவர் மேலும் குறிப்பிடுகையில், "12 அங்குல வட்டமுள்ள இந்த அமைப்பு, வானவெளியில் இயங்குவதன் மூலம் கால நிலையையும், ஒலிபரப்பையும் பாதிக்கின்ற சூரியனின் 'காஸ்மிக்' கிரணங்கள் பற்றிய தகவல்களையெல்லாம், இச்சந்திரனில் அமைக்கப்பட்டிருக்கும் கருவிகள் தாமாகவே பூமிக்குத் தெரியப்படுத்தும். இவ்வாறு கிடைக்கும் தகவல்கள் இராணுவத்திற்கும், பொருளாதார-விஞ்ஞான ஆராய்ச்சிகட்கும் பெரிதும் பயன்படும்" என்றும் தெரிவித்திருக்கிறார்.

இந்தச் சந்திரன் பூமிக்குமேல் 190 மைல் உயரத்தில் பூமியைச் சுற்றும் என்றும், அது இருக்க வேண்டிய இடத்திற்கு 3 ராக்கெட்டுகள் அதைக் கொண்டுபோய் சேர்க்கும் என்றும், இவையெல்லாம் மனிதர் யாரும் இல்லாமலே தாமாகவே நடைபெறக் கூடியன என்றும் அவர் கூறியுள்ளார்.

# "பிரிட்டிஷ் தொடர்பால் இந்தியா பெற்ற பேறு"

## சட்ட ஆட்சி நிலைத்துத் தழைக்க!

நீதிபதி மாலிக் கூறும் கருத்துரை

"மக்கள் முன்னேற்றத்தைக் குறியாகக் கொண்ட அறிவொளி படைத்த சட்டசபையும், அத்தகைய சட்டசபையின் கருத்துக்களுக்கு மக்கள் மதிப்பளித்து நடக்கின்றனரா என்பதைக் கண்காணிக்கும் நோக்குடன் சட்டசபையின் முடிவுகளைப் பெருங் கவலையுடன் காத்துநிற்கும் அறங்கூறும் அவையும் வழக்கறிஞர் மன்றமும் அமைந்திருந்தால்தான் சட்டத்தின் ஆட்சி நடைபெறுவது சாத்தியம்."

—இவ்வாறு, சட்ட ஆட்சியின் சிறப்புபற்றி, பணியிலிருந்து விலகும் உத்திர பிரதேச உயர்நீதி மன்ற நீதிபதி பி. மாலிக் அவர்கள் அறிவித்தார்.

அவர் மேலும் கூறியதாவது:—

"சிறந்த கல்வி அறிவும், பல வகை மக்களின் நெருங்கிய பழக்கமும் வழக்கறிஞர்களுக்கு இருப்பதால், தங்கள் நாட்டு மக்களுக்குத் தகுந்த வழிகாட்டக் கூடிய நிலையில் அவர்கள்தான் இருந்துவருகிறார்கள்."

"பிரிட்டனுடன் நாம் கொண்டிருந்த தொடர்பின் காரணமாக, சட்டத்தின் ஆட்சிக்கு மதிப்பளிக்கும் பண்பாட்டை பெற்றிருக்கிறோம். அதுவுமல்லாமல், முழுநேரம் பணிபுரியும் நீதிபதிகளைக் கொண்டு நிலையான அறங்கூறும் மன்றங்களின் துணையால், இனத்தவன்-பலவான், ஏழை—பணக்காரன் ஆகிய அனைவருக்கும் பொதுவாக உள்ள சட்டத்தைச் செயலாற்றும் அறங்கூறும் துறை அமைப்பையும் பெற்றுள்ளோம். மாறிவரும் நிலைமைக் கேற்பவும், மேலும் வளமுடையதாக்கவும், அதைத் திருத்தம் செய்ய இயலாது என நான் சொல்லவில்லை. ஆனால் இவ்வறங் கூறும் அமைப்போ, இதுவரை மனித அறிவாற்றலால் உருவாக்கப்பட்டுள்ள மற்றெல்லா அமைப்புகளிலும் சிறந்தும், காலசோதனையில் நிலைத்தும் இருந்து வரும் ஒன்றாகும்."

1954-ம் ஆண்டின் முதல் ஒன்பது மாதங்களில் இந்தியாவிலிருந்து மொத்தம் 33,841 குரங்குகள் ஏற்றுமதியாயின; அவை ஒவ்வொன்றுக்கும் 10 ரூபாய் வீதம் விலை கிடைத்தது.

*****************

## அறிவிப்பு

14, 15—1—55 ஆகிய இரு நாட்களும் திராவிடர் திருநாள் குறித்து, 'நம் நாடு' அலுவலகத்திற்கு விடுமுறையாதலால் அந்த நாட்களில் இதழ்கள் வெளிவராது என்பதை அறிவித்துக்கொள்கிறோம். அடுத்த இதழ் 17—1—55 திங்களன்று வழக்கம்போல் வெளிவரும்.

—பொறுப்பாளர்

******************

# சோவியத் பொருளாதார முறையின் பெருமை!

## இந்திய விஞ்ஞான மாநாட்டில் பேச்சு

"பொருளாதாரம், கலாச்சாரம் போன்ற மனித வாழ்வின் எல்லா துறைகளையும் அனுசரித்து திட்டமிட்ட பொருளாதாரக் கொள்கை மூலம், ரஷ்யா நல்லதொரு வெற்றிகண்டிருக்கிறது."

என்று, பரோடாவில் நடைபெற்ற இந்திய விஞ்ஞான மாநாட்டில் கலந்துகொண்ட ரஷ்ய விஞ்ஞானி ஒருவர் கூறினார்.

மேலும் அவர், "விவசாயம், தொழில் துறை இவை இரண்டிலும் ரஷ்யா முன்னேற்றம் அடைந்துள்ளது; மக்களின் வாழ்க்கைத் தரமும் உயர்ந்திருக்கிறது" என்றும் குறிப்பிட்டார்.

அவர் தாம் கூறியவற்றிற்கெல்லாம் ஆதாரங்களும் காட்டிப் பேசியிருக்கிறார்.

விவசாயம், தொழில் இவைகள் அனைத்தும் சர்க்காரின் கையிலிருப்பதால் சமப்படுத்தப்பட்ட பொருளாதார நிலை ஏற்பட்டிருக்கிறதென்றும் கூறினார்.

1940-ம் ஆண்டில் கிடைத்ததைவிட 1952-ம் ஆண்டில் ரஷ்யத் தொழிலாளரின் வருமானத்தில் 68 சதவிகித உயர்வு காணப்படுகிறதாம்.

அதேபோல், விவசாயிகளின் வருமானத்திலும் 72 சத விகித வருமான உயர்வு காணப்படுகிறதாம்.

இவ்விரு பிரிவினரின் வருமானத்திலும் 1953-ம் ஆண்டில் 13 சத விகிதம் உயர்வு ஏற்பட்டிருக்கிறதாம்.

சோஷலிசத்தில் சமப் பொருளாதார தத்துவம் பற்றிப் பேசுகையில் அவர், "உற்பத்தியில் ஒவ்வொரு தொழிலாளியின் பங்கு என்னவென்பது, அத்தொழிலாளியின் உழைப்பின் தரம், அளவு இவைகளைக் கொண்டு கணக்கிடப்படுகிறது" என்று கூறினார்.

"வெளிநாடுகளில் உள்ள சமூக அமைப்பு பற்றிக் கவலைப்படாமல், ரஷ்யா வெளிநாடுகளுடன் வியாபாரத் தொடர்பு கொள்ள விரும்புகிறது," என்றும் குறிப்பிட்டார்.

# இந்தியா முழுவதும் அறிந்த பெருந்தலைவர்கள் இல்லையாம்!

## கேரள, தமிழ் மாநிலங்கள் அமையாததற்கு அதுவே காரணமாம்!

சர்தார் கே. எம். பணிக்கர் கூறும் விளக்கம்

"கேரளம், தமிழ் நாடு ஆகிய இரண்டு மாநிலங்களும், இந்தியா முழுவதும் ஒப்புக்கொள்ளக் கூடிய அகில இந்தியத் தலைவர்கள் யாரையும் உருவாக்கவில்லை; கேரளம், தமிழ் நாடு ஆகிய இரு மாநிலங்களையும் பற்றி நான் நினைக்கும்போது, என்னால் மேற்கண்ட உண்மையை எண்ணாமல் இருக்க முடியவில்லை.

"கேரள மக்களிடம் ஒரு கேள்வியைக் கேட்டால், அவர்கள், இரண்டு கேள்விகளைத் திருப்பிக் கேட்கும் அளவுக்குச் சிறந்த அறிவுடையோராக இருக்கின்றனர். மலையாள மொழியைப் புறக்கணித்துவிட்டு வடமொழியைப் பயிலவும், ஆங்கிலத்தில் புலமை பெறவும் அவர்கள் முனைந்தனர். தங்கள் முன்னோர்கள் எழுதிய 'கோணத்தைப்' பின்பற்றிச் செல்லாமல், புதிய 'கோணம்' ஒன்றிலிருந்து அவர்கள் எழுதத் துவங்கிவிட்டனர். அதன் காரணமாகவே, கேரளத்தில், அகில இந்தியத் தலைவர்கள் உற்பத்தியாகவில்லை,"

—என்று பாலக்காட்டில், தனக்களிக்கப்பட்ட வரவேற்பு ஒன்றுக்குப் பதிலளிக்கையில், சர்தார் பணிக்கர் குறிப்பிட்டுள்ளார்.

தொடர்ந்து பேசுகையில் அவர் கூறியதாவது:—

"இந்தியா இப்போது கூட்டாட்சி நாடு; அதன் மத்திய சர்க்கார் வலிமையுடன் இருக்க வேண்டும்; மத்திய சர்க்காரைப் பலவீனப்படுத்தும் எந்த முயற்சியும் நாட்டின் நாசத்துக்கு அடிகோலுவதாகும்.

"மாநிலங்களைப் பிரிக்க, மொழி, நல்லதோர் அடிப்படையாகும் என்று பலர் நினைக்கிறார்கள்; ஆனால், இந்தி மொழி பேசும் 12 கோடி மக்கள், தாங்கள் வாழும் ஐந்து மாநிலங்களை ஒன்றாகச் சேர்த்து ஒரே மாநிலமாக அமைக்க வேண்டுமென்று கோரவில்லை.

(4-ம் பக்கம் பார்க்க)



# சமுதாயப் பிரச்சினை உயிர் போன்றதாகும்

## 'மதச் சார்பற்ற' சர்க்கார் மதத்தைக் காப்பாற்ற முற்படுவானேன்?

### மதுரை மாவட்ட சமூக சீர்திருத்த மாநாட்டில் தோழியர் சத்தியவாணிமுத்து தலைமையுரை

"சமூக சீர்திருத்தப் பணியில் தீவிரமாக ஈடுபட்டுள்ள நம்மை சிலர் கேலிபேசுகிறார்கள்—கேள்வி கேட்கிறார்கள்—'நாட்டில் பல பிரச்சினைகளிருக்கும்போது சமூக சீர்திருத்தம் அவசியம்தானா?' என்று.

"ஒரு நாட்டின் அரசியல் பிரச்சினை உடல் என்றால், சமுதாயப் பிரச்சினை உயிராகும். அரசியலைச் சரிக்கட்டிவிடுவதின் மூலமே ஒருநாடு நன்கு வாழ்ந்துவிட முடியாது; எனவேதான், ஒருநாட்டின் உயிர்போலிருக்கிற சமுதாயம், சீர்திருந்தியதாய்—முற்போக்கு எண்ணங்கொண்டதாய், பகுத்தறிவு பெற்றதாயிருக்க வேண்டுமென நாம் விழைகிறோம்.

"நாட்டில், மதத்தின் பெயரால்—அவை கற்பிக்கும் எண்ணற்ற கடவுளர்களின் பெயரால்—ஆபாசச் சடங்குகளும், மூடத் திருவிழாக்களும் நடைபெறுவதை நாம் காண்கிறோம்; மதத் திருவிழாவென்ற பெயரால் தமிழ் நாட்டுப் பெண்கள் வேப்பிலையைச் சேலையாகக் கட்டிக்கொண்டு பெரியபாளையம் எனும் ஊரில் கூத்தாடுவதைக் காண்கிறோம்; வீதி வழியே காவடி எடுத்து ஆடுவதையும், கோவிலுக்கு என்று கூறி, முடி வளர்த்து, மொட்டையடித்துக்கொள்வதையும் பார்க்கிறோம்; இவைபோன்ற மூடச் சடங்குகளை ஒழித்துவிட்டு, நாகரீகம் பெற்றவர்களாய், மக்கள் என்று மாறுவது?

"இவை போன்ற சடங்குகள் மதத்தின் பெயரால், எண்ணற்ற கடவுளரின் பெயரால் நடைபெறுகின்றன; எனவேதான், மதமும்—கடவுளர்களும், மக்களுக்கு, அறிவையும்—வாழ்வையும் தரவல்லனவல்ல என்று எடுத்துக் கூறுகிறோம்.

"நாம் இவற்றைக் கூறுவதனாலேயே கடவுள் இல்லை என்று கூறுவதாகச் சிலர் எண்ணுகிறார்கள். நாம் 'கடவுள் இல்லை' என்று எப்பொழுதும் சொன்னதில்லை. திராவிட மக்கள் எல்லோரும், ஒரே குலத்தவராக, சாதிப்பாகுபாடுகளைத் துறந்தவர்களாக, ஒரே தேவனைக் கொண்டவர்களாக மாறவேண்டும் என்றே முயன்று பாடுபடுகிறோம்."

—இவ்வாறு தோழியர் சத்தியவாணிமுத்து அவர்கள் மதுரை மாவட்ட தி. மு. கழக 2-வது சமூக சீர்திருத்த மாநாடு 8—1—55 சனியன்று, மதுரை ஞான ஒளிவுபுரத்தில் நடைபெற்றபோது குறிப்பிட்டார்.

தொடர்ந்து பேசுகையில் அவர் கூறியதாவது:—

"நாம் இந்த நாட்டிலே நிலவும் எத்தனையோ எண்ணற்ற சாதிப் பாகுபாடுகளை, உயர்ந்தவன்—தாழ்ந்தவன் என்ற ஏற்றத் தாழ்வுகளை நீக்கவேண்டும்—இந்த சாதிகளையும், வேறுபாடுகளையும் புகுத்துகிற வருணாச்சிரம அடிப்படைகளைத் தகர்த்தெறிய வேண்டும் என்று பேசுகிறோம்; அப்போது ஆச்சாரியார் போன்றவர்கள் மனம் புண்படுவதாகக் கூக்குரலிடுகின்றனர்; சட்டசபைகளின் தயவை நாடி, தஞ்சம் புகுகின்றனர்.

நாட்டில் நடைபெறும் எந்த நல்ல காரியத்தினால்தான் ஆச்சாரியார்களின் மனம் புண்படாமலிருக்கிறது?

'பொருள்களைத் திருடாதே; பிறர் சொத்துக்களை அபகரித்தால் தண்டிப்போம்,' என்று கூறும்போது, திருடர்களின் மனம் புண்படத்தான் செய்கிறது; அதற்காக திருட்டுத்தனத்தை அனுமதிக்க முடியுமா?

நாட்டிலே நாம் செய்கிற நல்ல பல பணிகட்கும் எதிர்ப்பு இருந்துதான் வந்துள்ளது; அந்த எதிர்ப்பு கண்டு நாம் அஞ்சியது கிடையாது—இனியும் அஞ்சமாட்டோம்.

'இராமாயண' நாடகத்தை நாம் நடத்தினால், சிலருடைய மனம் புண்படுகிறதாம்; என்ன செய்வது? கண் நொள்ளையாயிருப்பவன், பிறர் தன்னை 'நொள்ளைக் கண்ணன்' என்று கூப்பிடுவது கண்டு கோபப்பட்டு என்ன பயன்? கண் நொள்ளையாயிருப்பதற்கான ரோகத்தைத் தீர்த்துக் கொள்வது தானே முறை? அதைவிட்டுவிட்டு, 'என்னைக் கேலி செய்கிறார்களே?' என்று ஏன் கூச்சலிட வேண்டும்? அதே போன்றதுதான், 'இராமாயண' நாடகத்தைப் பற்றிய கூக்குரலும்.

'மதச் சார்பற்ற சர்க்கார்,' மதத்தைக் காப்பாற்றுகிற நடவடிக்கைகளில் ஈடுபடுவதை நாம் காண்கிறோம். மதச் சார்பற்ற அரசாங்கம் என்று சொல்லுகிற அவர்கள், அதன்படி நடக்க முன்வருவதில்லையே! சொல்வதைச் செய்வதில்லையே! சர்க்காரின் இத்தகைய செய்கைகள் நம் மனதைப் புண்படுத்துகின்றனவே! அண்மையில், 'பெண்களுக்கு உத்தியோகம் தராதே,' என்ற பொருள்பட எ. எஸ். பி. அய்யர் அவர்கள், கூட்டமொன்றில் பேசியிருக்கிறார்—பெண்களுக்கு, வாழ்வின் எல்லாத்துறைகளிலும் சம பங்கும், சமசந்தர்ப்பமும் வேண்டுமெனக் கோரப்படும் இந்தக் காலத்தில்!

பெண்கள், ஆண்களின் அடிமைகளாக நடத்தப்படும் கொடுமை ஒழியவேண்டுமெனக் கோரும் நமக்கு அய்யரவர்களது பேச்சினால் மனம் புண்படவில்லையா?

எனவே, சமுதாயத்தில் உள்ள கோளாறுகளைப் போக்கப் பாடுபடும் நமது இயக்கத்தின் நடைமுறைகளை வேரறுக்க பார்ப்பனர்கள் தங்கள் சொந்த நலங்கருதி சட்டங்கள் இயற்ற முற்படவும், தாண்டவும் செய்கிறார்கள். அத்தகைய சட்டங்கள் எல்லாம் நாம் மேற்கொண்டுள்ள சீர்திருத்தப் பணியினை எவ்வகையிலும் தடுத்து நிறுத்திவிட முடியாது."

## தணிக்கை எண் காணீர்!

மத்திய சினிமாப் படத் தணிக்கை போர்டு, அது அமைக்கப்பட்ட தேதியிலிருந்து இதுவரை 12,132 திரைப்படங்களைத் தணிக்கை செய்து அத்தாட்சி வழங்கியுள்ளது. இப்படங்களில், துண்டுப் படங்களும், 'டிரெய்லர்' படங்களும் அடங்கியுள்ளன. தணிக்கை செய்யப்பட்ட படங்களின் மொத்த நீளம் 3,15,78,865 அடிகளாகும்.

# அரசியல் நேர்மையும் ஒழுக்கமும் மிக்கது தி.மு.கழகம்

## அதிகாரங்களைபறித்துக்கொள்வது ஏகாதிபத்திய அறிகுறியே!

### மதுரை தி. மு. கழக அரசியல் மாநாட்டில் எம். பி. சுப்பிரமணியம் எம்.எல்.ஏ. திறப்புரை

"அரசியலில் நேர்மையையும் ஒழுக்கத்தையும் பிறருக்கு கற்றுத் தருகிற அளவு தி. மு. கழகம் வளர்ந்துள்ளது.

"சரிந்துவரும் தன் செல்வாக்கைச் சரிக்கட்ட இந்த நாட்டின் மிகப் பெரிய தேசீய இயக்கமென்று கருதப்பட்ட காங்கிரஸ், 'வட ஆற்காடு மாவட்டத்தில் வன்னியர்கள் அதிகமா?—அவர்களின் ஆதரவைப் பெற்ற ஒரு மாணிக்கவேலரை மந்திரியாக்கு; தென்னாற்காடு மாவட்டத்தில் வன்னியர் தொகை அதிகமா?—அவர்களைத் திருப்திப்படுத்த ஒரு ராமசாமிப் படையாச்சியை மந்திரியாக்கு,' என்று வலை வீசித் திரிகிறது. இது, நாட்டில் அரசியல் ஒழுக்கம் குன்றி வருவதைக் காட்டுகிறது; காங்கிரசின் இப்போக்கிற்கு தி. மு. கழகம் நல்ல பாடம் கற்பித்திருக்கிறது.

"திருச்சி மாவட்டத்தில் ராஜா சிதம்பரம், தோழர் அன்பில் தர்மலிங்கம் அவர்களிடம் படுதோல்வி கண்டார்; அதேபோலத்தான், தென்னாற்காடு மாவட்டத்தில், தோழர் ஏ. கோவிந்தசாமியும் காங்கிரசை எதிர்த்து, மகத்தான வெற்றி பெற்றார். இந்த இரு தேர்தல் முடிவுகளும், ஒழுக்கங்கெட்டு அலையும் காங்கிரஸ் கட்சிக்கு நல்ல பாடமாக அமையவில்லையா, என்ன?"

—இவ்வாறு தோழர் எம். பி. சுப்பிரமணியம், எம்.எல்.ஏ. அவர்கள், மதுரை மாவட்ட தி. மு. கழக அரசியல் மாநாட்டினை கடந்த 9—1—55 ஞாயிறன்று திறந்துவைத்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

தொடர்ந்து அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"கம்யூனிஸ்டு கட்சி ஒரு அகில இந்தியக் கட்சி; ஆனால், அக்கட்சி, தென்னாட்டைப் பொறுத்த வரையில் உண்மை நிலைகளை உணர்ந்து பார்க்க மறுக்கிறது. அந்தக் கட்சியினர் தங்களது இலட்சியத்திற்கான விளக்கத்தை இதுவரை தந்தது கிடையாது. 'தொழிலாளர்களின் கூலி உயர்வுப் பிரச்சினை மட்டுமே ஒரு நாட்டின் அரசியல் பிரச்சினை,' என்றெண்ணுகிறார்கள் போலும்! அந்தப் பிரச்சினையைக் கூறியே கட்சியை வளர்க்க முற்படுகிறார்கள்.

காங்கிரஸ் கட்சி, 'நாட்டிற்கு விடுதலை பெற்றுத் தந்த கட்சி' என்று கூறுகிறார்கள்; இன்று ஆட்சிபீடத்தில் வேறு இருக்கிறார்கள்; என்றாலும், அவர்களால், இந்த நாட்டு மக்களின் தேவைகளைப் புரிந்துகொண்டு செயலாற்ற இயலவில்லை.

தி. மு. கழகம்தான், இன்று நாட்டு மக்களிடம், வேறெந்தக் கட்சிக்கில்லாத அளவு செல்வாக்கைப் பெற்றதாயும், மக்களுடன் தொடர்பு கொண்டதாயும் விளங்குகிறது. கழகத்தின் பொதுக் கூட்டமோ, அல்லது இம்மாதிரி மாநாடுகளோ கழக லட்சிய விளக்கத்தை வெகு தெளிவாகத் தருகின்றன.

காங்கிரசும், இதர கட்சிகளும், 'இந்தியா முழுவதும் ஒன்று; ஒரே நாடு,' என்று கூறுகின்றன. குறிப்பாகக் காங்கிரஸ் கட்சி இந்தியா முழுவதும் இந்து மதத்தவரே இருக்கவேண்டுமென விரும்புகிறது; அதற்காக மறைமுகமாகச் செயல்படவும் செய்கிறது.

இந்தியாவென்பதே இந்துமத அடிப்படையில் அமைந்திருப்பதாயும், அந்த இந்துமதம் காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரையில் பரவியிருப்பதால் இந்தியா ஒரே நாடுதான் என்று வாதிடவும் முனைகிறார்கள்.

கிறிஸ்துவர்கள், உலகத்தில், 40 கோடிக்கும் அதிகமாக இருக்கிறார்கள்; இந்தியாவிலும், இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும், கிறிஸ்துவர்கள் இருக்கின்றனர். இதனாலேயே, இவர்களெல்லோரும் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்கள் எனக் கொள்ள முடியாதே!

அதே போலத்தான், இஸ்லாம் மதத்தவர்களும் உலகின் பல பாகங்களில் வசிக்கிறார்கள்; இஸ்லாம் என்ற ஒரே மதத்தைச் சார்ந்தவர்கள் என்பதனாலேயே அவர்களெல்லோரும் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்கள் எனக் கொள்ள முடியாதே!

அப்படி இருக்க, தென்னாட்டிலும் இந்து மதத்தினர் இருக்கிறார்கள் என்பதாலேயே, 'தென்னாடும் சேர்ந்ததுதான் இந்தியா' என்று கூறி, இந்தியாவை ஒரே நாடென்று கூறுவது எப்படிச் சரியானதாயிருக்க முடியும்?

இன்று நாம், "தென்னிந்தியாவைவிட்டு வடநாட்டவர்கள் வெளியேற வேண்டும்,' என்று சொல்லுகிறோம் — பிரெஞ்சிந்தியாவை விட்டு பிரெஞ்சுக்காரர்களும், கோவாவைவிட்டு போர்த்துகீசியர்களும் எந்தக் காரணங்களுக்காக வெளியேற வேண்டும் என்று கூறுகிறார்களோ, அதே காரணங்களுக்காகவேதான்!

தென்னாட்டு மக்களுக்கு இன்று வாழ்வில்லையென்றால், அதற்கு என்ன காரணம்? வாழ்வு தருவதற்குப் போதிய அதிகாரங்கள் சென்னை மாநில ஆட்சிப் பீடத்திடம் இல்லை; எல்லா அதிகாரங்களும் டெல்லி ஆட்சியிடம் குவிந்து கிடக்கின்றன.

சென்னை அரசாங்கம் ஏதேனும் சட்டமியற்றினால், அந்தச் சட்டம் தனக்குப் பிடிக்கவில்லை என்றால், அந்தச் சட்டத்தை ரத்து செய்யும் அதிகாரம் டெல்லி ஆட்சி பீடத்திடம் இருக்கிறது.

உணவுப் பொருள், கச்சாச் சணல் இவற்றைக் கட்டுப்படுத்துகிற அதிகாரம் மாநிலங்களிடம் இருந்தன; இப்போது இந்த அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்தால் பறிக்கப்பட்டுவிட்டன.

இப்படி அதிகாரங்கள் சிறிது சிறிதாகப் பறிக்கப்படுவது, ஏகாதிபத்தியம் நிலை பெறுவதற்கான அறிகுறி—சூச்சகம் என்பதை நல்லறிவாளர்கள் உணரவேண்டும்.

மேலும் நாம் வடநாட்டு அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் ரூ. 46 கோடி வரி தருகிறோம்; இந்த 46 கோடி ரூபாயும் நமக்கே—வரி கொடுத்த சென்னை மக்களுக்கே செலவிடப்படுகிறதா என்றால், இல்லையே!

இம்மாதிரி வரிகளையும், இன்னும் பல வகையில் பணம் திரட்டி, அபிவிருத்தித் திட்டங்கள் தீட்டப்பட்டனவே, ஐந்தாண்டுத் திட்டம் என்ற பெயரால்—அந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் தென்னாட்டின் பங்கு என்ன?"

என்று தோழர் சுப்பிரமணியம் கேட்டுவிட்டு, தொடர்ந்து பேசுகையில், திராவிடர்கள்பூரணசுதந்திரத்துடன் வாழவேண்டுமென்பதே நம் குறிக்கோள் என்றும், இன்றுள்ள நிலையில் கம்யூனிஸ்டுகளே ஆட்சி பீடம் ஏறினாலும் பிரமாதமாக எதும் செய்துவிட முடியாது என்றும், உழைப்பின் பலன், வடக்கு நோக்கிச் சென்றுகொண்டே இருந்தால் இந்த நாட்டுச் செல்வ நிலை உயர முடியாது என்றும், அவர்கள், இதை உணரவேண்டும் என்றும் விளக்கிப் பேசினார்.

# கும்பமேளா கொலை நிகழ்ச்சிகளுக்கு நிர்வாண ஊர்வலமே காரணம்!

## விசாரணைக் குழுவின் அறிக்கை

"கும்பமேளாவில் சென்ற ஆண்டில் நடைபெற்ற கோரமான நிகழ்ச்சிகளுக்கு முக்கியமான காரணம் நாகர்களுக்கும், யாத்திரிகர்களுக்கும் இடையே நடைபெற்ற கலவரமேயாகும்."

"நாகர்களின் நிர்வாண ஊர்வலம் செல்லும் பாதையில் யாத்திரிகர்கள் செல்ல அனுமதிக்கப்பட்டது; இப்போக்கை நாகர்கள் எதிர்த்திருக்கிறார்கள்; இதன் காரணமாக கலவரம் ஏற்பட்டது,"

—என்று, கும்பமேளா நிகழ்ச்சிகள் பற்றிய விசாரணைக் குழுவின் அறிக்கை தெரிவிக்கிறது.

இக்குழுவின் தலைவரான கமலகாந்த வர்மா தனது அறிக்கையில், "மேளா அதிகாரிகள், ஏராளமான மக்களை மகிழ்விக்க வேண்டுமென்ற நோக்கத்தில், சாதாரண போக்குவரத்து விதிகளைக் கடைபிடிக்கத் தவறிவிட்டார்கள்," என்று குறிப்பிட்டிருக்கிறார்.

"கும்பமேளா நிகழ்ச்சிகளுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த போலீசாரின் எண்ணிக்கை போதவில்லை; மேளாவுக்கு ஒதுக்கப்பட்டிருந்த போலீசாரைவிட, ஆயிரம் போலீசாரும், 300 ஆயுதந்தரித்த போலீசாரும் அதிகமாக ஒதுக்கப்பட்டிருக்க வேண்டும்," என்று அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

"நாகர்களின் நிர்வாண ஊர்வலம் சென்ற பாதையும், சாதாரண மக்கள் சென்ற பாதையும் ஒரே பாதையாக இருந்தது தவறு; அவைகளுக்கென்று தனித்தனி பாதைகள் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்," என்றும், "சாதுக்களை மகிழ்விக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் ஜில்லா மாஜிஸ்திரேட், அவர்களுக்கு அதிக சலுகை அளித்திருக்கிறார்—இப்படிச் செய்தது தவறு," என்றும், அறிக்கையில் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது.

## பள்ளிப் புத்தகங்களை சர்க்காரே அச்சிட வேண்டும்

### கல்விக் குழுவினரிடம் யோசனை

பள்ளிகளுக்குத் தேவையான புத்தகங்கள் அனைத்தையும், சர்க்காரே அச்சிட்டு வெளியிடவேண்டுமென்றும், அதன் மூலம் கிடைக்கும் லாபத்தைப் பள்ளி ஆசிரியர்களின் நலனுக்காக பயன்படுத்தலாம் என்றும், சென்னை சர்க்கார் ஆரம்பப் பள்ளிக் குழுவின் முன்னிலையில், ஈரோடு தாலுகா முதியோர் கல்விக் குழுவின் தலைவர் ஆர். கே. வெங்கடசாமி கூறினார்.

கல்விக் குழுவினர் சேலத்திலிருந்து கோவை செல்லும் வழியில் இங்கு வந்திருந்தனர்.

# ஆந்திராவில் 69 தொகுதிகளில் பெண்கள் அதிகமாம்!

பிப். 11-ல் தேர்தல் ஆரம்பம்

ஆந்திர நாட்டு வாக்காளர்களில், பெண்கள், 69 தொகுதிகளில் ஆண்களைக் காட்டிலும் எண்ணிக்கையில் அதிகமாக இருக்கிறார்களாம்.

ஸ்ரீகாகுளம் பகுதியில் சோம்பேட்டை தொகுதியில் ஆண்களை விட பெண் வாக்காளர்கள் 10,000 பேர் அதிகமாக இருக்கிறார்களாம்.

நெல்லூர் பகுதியில் உள்ள புச்சிரெட்டிபாளையத்தில் மொத்தம், 1,31,814 வாக்காளர்கள் இருக்கின்றனராம்; இவர்களில் பெண்களின் எண்ணிக்கை ஆயிரக்கணக்கில் அதிகமாக இருக்கிறதாம்.

ஆந்திராவில் உள்ள மொத்த வாக்காளர்கள் 1,13,75,648 பேர்களில் 56,59,123 பேர் பெண்களாம்.

ஆந்திராவில் நடைபெறும் புதிய தேர்தலை ஒட்டி, அங்கு பண்டித நேரு 14, 15-ந் தேதிகளில் சுற்றுப்பயணம் செய்வார் என்று தெரிகிறது.

ஆந்திராவில் தேர்தல் சுற்றுப் பயணம் செய்யுமாறு ஆச்சாரியாரை ஆந்திர காங்கிரசின் தலைவர் கோபால் ரெட்டி கேட்டுக்கொண்டிருக்கிறாராம்

ஆந்திரப் பொதுத் தேர்தல் பிப்ரவரித் திங்கள் 11-ந் தேதியன்று ஆரம்பமாகும்.

ஆந்திர மாநிலம் அமைக்கப்பட்ட பிறகு முதல் தடவையாக நடைபெறும் பொதுத் தேர்தல் இதுதான்.

---

## மாவட்டந்தோறும் கால்நடைப் பண்ணை

சென்னை சர்க்கார் விரும்புகிறதாம்

இந்தியாவில் கால்நடைகள் ஏராளமாக இருக்கின்றனவென்றும், ஆனால் அவைகளின் 'தரம்' உயர் தரமாக இல்லையென்றும் பாலக்காடு அருகில் நடைபெற்ற கால்நடைக் கண்காட்சியில் பேசுகையில் சென்னை அமைச்சர் பக்தவத்சலம் கூறினார்.

தொடர்ந்து அவர் பேசுகையில், சர்க்கார் ஒவ்வொரு மாவட்டத்திலும் கால்நடைப் பண்ணை ஒன்று நடத்த விரும்புகிறது என்றும் தெரிவித்தார்

---

# இந்தியா முழுவதும்...

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

"அதைப் போலவே, இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, கனடா போன்ற ஆங்கிலம் பேசும் நாடுகள், மொழி அடிப்படையில் ஒரே மாநிலமாக அமைக்க வேண்டுமென்று கோரவில்லை.

"இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்த பின்னர், கடந்த ஐயாயிரம் ஆண்டுகளாக ஏற்படாத ஒற்றுமை இந்தியாவில் ஏற்பட்டது. அசோகனுடைய காலத்திலும் சரி, அல்லது அக்பரின் காலத்திலும் சரி, இந்தியா முழுமையும் ஒரே நாடாக இருந்தது கிடையாது: ஆங்கிலேயருடைய ஆட்சியிலும் இந்தியா ஒரே நாடாக இருந்தது கிடையாது. அப்போது, இந்தியா, 'பிரிட்டிஷ் இந்தியா' என்றும், 'சமஸ்தானாதிபதிகள் பிரதேசம்' என்றும் இரண்டாகப் பிரிந்திருந்தது.

"இப்போது இந்தியாவுக்குக் கிடைத்திருக்கும் ஒற்றுமை விலை மதிக்க முடியாதது; அதைப் பாதுகாத்து பலப்படுத்த அனைவரும் முயற்சிக்க வேண்டும்.

"மாநில புனரமைப்புக் குழுவின் வேலை மிகவும் கடினமானது குஜராத் நாட்டையோ, அல்லது கேரள நாட்டையோ எப்படி அமைப்பது என்பதல்ல பிரச்சினை; இந்தியாவின் ஒற்றுமையைப் பலவீனப்படுத்தாமல், எப்படிப் பிரிவினை செய்வது என்பதுதான் மாநிலப் புனரமைப்புக் குழுவின் முன்னுள்ள பிரச்சினையாகும்."

---

# தமிழகத்தில் திராவிடர் திருநாள்

## விழா நிகழ்ச்சிகள்

### சென்னை

சென்னை 9-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், 14—1—55 காலை 10 மணிக்கு, தோழர் விமுனுசாமி தலைமையில், கழக பணிமனையில் நடைபெறும். தோழர்கள் என். வி. நடராசன், ஏ. எஸ். ராமன், கலைச்செழியன், தே. செல்வபதி ஆகியோர் கலந்து கொள்ளுவர். தோழியர் சத்திய வாணிமுத்து ஏழைகளுக்கு கஞ்சி அளிப்பார்.

* * *

சென்னை 10-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், 15-1-55 காலை, பிடாரியார் கோவில் தெருவில், தோழர்கள் ஏ. ஆர். சேஷாசலம், வி. சி. வெற்றிச்செல்வன் ஆகியோர் முன்னிலையில் ஏழைகளுக்கு அன்னமும், குழந்தைகளுக்கு பாலும், சிறுவர்களுக்கு இனிப்பும் வழங்கப்படும். அன்று மாலை 6 மணிக்கு இன்னிசை நடைபெறும்.

* * *

சென்னை 24-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், 14-1-55 காலை 9 மணிக்கு, கழகத்தில் பொதுமக்களுக்கு சர்க்கரைப் பொங்கல் கொடுக்கப்படும். பலர் சொற்பொழிவாற்றுவர்.

* * *

சென்னை 37-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், 14-1-55 காலை 8 மணிக்கு, கழக பணி மனையில் கொடியேற்றுவித்து, ஏழைகளுக்கு சர்க்கரைப் பொங்கல் வழங்கப்படும் மாலை 2 மணிக்கு ஊர்வலம் புறப்பட்டு சென்னை மாவட்ட தி. மு. கழகம் நடத்தும் திராவிடர் திருநாள் விழாவில் கலந்துகொள்ளும்.

* * *

சென்னை 43-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், 14-1-55 காலை 9 மணிக்கு, கழக பணி மனையில், கழக உறுப்பினர்களுக்கு தேநீர் விருந்தும், ஏழைகளுக்கு கஞ்சி ஊற்றுதலும் நடைபெறும்

* * *

இளைஞர் முன்னேற்ற மன்றச் சார்பில், 14—1—55 காலை 10 மணிக்கு, மணிகண்டமுதலி 6-வது தெருவில், பொதுமக்களுக்கு இனிப்பு வழங்கப்படும்.

* * *

தமிழ்க் கலைக் கழகச் சார்பில் 14—1—55 காலை 8 மணிக்கு, தியாகராயர் கல்லூரி கலா மண்டபத்தில் நடைபெறும். தோழர்கள் என். வி. நடராசன், கண்ணதாசன் ஆகியோர் கலந்துகொள்வர்.

* * *

சிந்தாதிரிப்பேட்டை மறுமலர்ச்சிமன்றச் சார்பில், 14-1-55 காலை 8 மணியளவில், பள்ளி தெருவில், தோழர் சீனிவாசன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் டி. வி. நாராயணசாமி, முகவை ஆர். எஸ் பாண்டியன், தென்னரசு ஆகியோர் கலந்துகொள்வர்.

* * *

முத்தமிழ் கலை மன்றச் சார்பில், 14—1—55 அன்று, இன்னிசைக் குழுவினருடன் இரு காளைகள் பூட்டப்பட்டு நன்கு அலங்கரிக்கப்பெற்ற வண்டிகளில் ஊர்வலம் வரும்.

★

### நாகப்பட்டினம்

நாகப்பட்டினம் தி. மு. கழக சார்பில், ஜன. 14, 15-ந் தேதிகளில், கழகக் கட்டிடத்தில் நடைபெறும்: கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டி, குறள் ஒப்புவித்தல் போட்டி, குறள் கருத்து விளக்கப் போட்டி, கலைக் கண்காட்சி—கருத்து விளக்கம் முதலியனவும், தோழர்கள் டி. கே. சீனிவாசன், அலிசேக் மன்சூர், புலவர் குழந்தை ஆகியோரின் சிறப்புச் சொற்பொழிவும் நடைபெறும்.

## பொதுக் கூட்டங்கள்

### சென்னை

வடசென்னை தாளமுத்து நடராசன் முன்னேற்ற மன்றச் சார்பில், 17—1—55 மாலை 6 மணிக்கு, இராயபுரம், மீனாட்சியம்மன்பேட்டையில், தோழர் காஞ்சி கல்யாணசுந்தரம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் கண்ணதாசன், முகவை ஆர். எஸ் பாண்டியன், தோழியர் அருண்மொழி ஆகியோர் பேசுவர்.

* * *

சென்னை 8-வது வட்ட திருவள்ளுவர் முத்தமிழ் கழகச் சார்பில், 15—1—55 மாலை 5-30 மணிக்கு, பெத்துநாய்க்கன் பேட்டை, காசி விசுவநாதர் கோயில் முன் தோழர் மு. ப. புட்பரத்தினம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் என். வி. நடராசன், காஞ்சி கல்யாணசுந்தரம், ஏ. கே. வேலன், சி. ஆர் பாலசுந்தரம், டி. எம். முத்துவேலு ஆகியோர் பேசுவர்.

* * *

ஆலந்தூர் தி. மு. கழகச் சார்பில், 16—1—55 மாலை 5-30 மணிக்கு, ஆலந்தூர் தருமராசா கோயில் எதிரில், தோழர் கே.எஸ். அருணாசலம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் கண்ணதாசன், முகவை ஆர். எஸ். பாண்டியன், வி. எஸ். கோவிந்தராசன் ஆகியோர் பேசுவர்.

* * *

சென்னை மாவட்ட தமிழரசுக் கழகச் சார்பில், 14—1—55 மாலை 6 மணிக்கு, கோகலே மண்டபத்தில், தோழர் ம. பொ. சிவஞானம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் கி. வா. ஜகநாதன், ஏ. எஸ். பி. அண்ணாமலை, கா. மு. ஷெரிபு, சின்ன அண்ணாமலை ஆகியோர் பேசுவர்.

★

### செங்கற்பட்டு

16—1—55 மாலை 5 மணியளவில் தர்க்கா திடலில், காஞ்சி-கல்யாணசுந்தரனார் அவர்களும், மற்றும் பலரும் பொங்கல், சமுதாயம், அரசியல் பற்றி சொற்பொழிவாற்றுவர்.

★

### ஈரோடு

ஈரோடு வள்ளுவர் மன்றச் சார்பில், ஈரோடு பெரியார் நகர் மன்றத்தில், கலைவிழா நிகழ்ச்சிகள் 3 நாட்கள் தொடர்ந்து நடைபெறும்.

14—1—55ல், காலை 9-30 மணிக்கு மாணவர் பேச்சுப் போட்டியும், மாலை 4 மணிக்கு மாணவர் இன்னிசைப் போட்டியும், இரவு 10 மணிக்கு மறுமலர்ச்சி மன்றத்தாரின் 'சாந்தா' நாடகமும் நடைபெறும்.

15—1—55 காலை 9¾ மணிக்கு தோழர் ஆறுமுகம் தலைமையுரையாற்றியபின், 10-45 மணிக்குத் தோழர் க. அன்பழகன் அவர்கள் 'திராவிடர் திருநாள்' என்பது குறித்தும், மாலை 4 மணிக்குத் தோழர் க. அறிவழகன் அவர்கள் 'கலையும் வாழ்வும்' என்பது குறித்தும் சொற்பொழிவாற்றுவர்.

16-1-55 காலை 9-45 மணிக்கு நடைபெறும் இறுதி நாள் விழாவில் தோழர் ஈ. வெ. கி. சம்பத் தலைமையுரையாற்றுவார். 11-15 மணிக்கு தோழர் டி. கே. சீனிவாசன், 'புதிய சமுதாயம்' என்பது பற்றி சொற்பொழிவாற்றுவார். மாலை 4 மணிக்கு மாணவருக்குப் பரிசு வழங்கலும், 4-30 மணிக்கு இன்னிசை அரங்கும், 6 மணிக்கு, தோழர் சி. இலக்குவனார் அவர்களது 'மறுமலர்ச்சி' என்பது பற்றிய சொற்பொழிவும், இரவு 10 மணிக்கு நகர நடிக மன்றத்தாரின் 'நாட்டியக்காரி' நாடகமும் நடைபெறும்.

### குனியமுத்தூர்

குனியமுத்தூர் தி. மு. கழகச் சார்பில், 15—1—55 மாலை 3 மணிக்கு, பேச்சுப் போட்டியும், பாட்டுப் போட்டியும் நடைபெறும். பொதுக்கூட்டத்தில் தோழர்கள் சி. டி. தண்டபாணி, பஞ்சு-பாலசுந்தரம், தங்கமாணிக்கம் ஆகியோர் பேசுவர்.

★

### உறையூர்

உறையூர் சங்கரன்படிப்பகச் சார்பில், 16—1—55 மாலை மேட்டுத் தெரு மைதானத்தில் தோழர் எம். எஸ் மணி தலைமையில் நடைபெறும். தோழர்கள் க. அன்பழகன், கோவை செழியன், திருநாவுக்கரசு ஆகியோர் பேசுவர்.

★

### பொள்ளாச்சி

பொள்ளாச்சி பகுத்தறிவு மன்றச் சார்பில், 16—1—55 மாலை 6 மணிக்கு, மார்க்கெட் ரோடு, வள்ளுவர் திடலில் தோழர் பி. மயில்சாமி தலைமையில் நடைபெறும். தோழர்கள் ப. உ. சண்முகம், பி. என். இராமானுசம் ஆகியோர் பேசுவர்.

★

### அறந்தாங்கி

அறந்தாங்கி தி. மு. கழகச் சார்பில், 16—1—55 அன்று வ. உ. சி. திடலில், தோழர் ஒவியன் கர்ணு தலைமையில் நடைபெறும். போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு தோழர் இளமுருகு-பொற்செல்வி பரிசளிப்பார். தோழர் எம் எஸ் இராமசாமி பேசுவார்.

★

### கரூர்

15—1—55 மாலை 6 மணிக்கு நாகம்மையார் திடலில் தோழர் ஆர். ராதா தலைமையில், தோழர்கள் எஸ். நெடுமாறன், கே. எஸ். ராஜமான் சொற்பொழிவாற்றுவர்.

இரவு 8 மணிக்கு கரூர் கருணாநிதி நாடக மன்றத்தாரால் 'இன்பத் திராவிடம்' நாடகம் நடைபெறும்.

★

### பெரியகுப்பம்

பெரியகுப்பம் தி. மு. கழகச் சார்பில், 15—1—55 மாலை 5 மணிக்கு, திருவள்ளூர் புகைவண்டி பாதை அருகாமையில் (நகராட்சி பூங்கா எதிரில்), தோழியர் எமிலி வடிவேல்ராஜ் தலைமையில் நடைபெறும். தோழர்கள் முகவை ஆர். எஸ். பாண்டியன், ஏ. எல் சி கிருஷ்ணசாமி, பெ தா. இன்மொழியன், டி ஆர். வரதன், பி. நாராயணன் ஆகியோர் பேசுவர்.

★

### சென்னிமலை

சென்னிமலை தி. மு. கழகச் சார்பில், 15—1—55 அன்று தோழர் சா. மதிவாணன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் க. அன்பழகன், க. அறிவழகன் ஆகியோர் பேசுவர்.

★

### பூலாமேடு

14—1—55 வெள்ளி மாலை 4 மணிக்கு தோழர் ஆ. இராசாமணி அவர்கள் தலைமையில் நடைபெறும். தோழர்கள் ஆர். பாலகுருசாமி, பொ. சொக்கலிங்கம், ஆர். இராமானுஜம், பேபி — இளங்கோ ஆகியோர் சொற்பொழிவாற்றுவார்கள்.

★

### மணக்கால்

மணக்கால் தி. மு. கழகச் சார்பில், மேற்படியூர் மண்டபத்தின் முன்பு, 15—1—55 மாலை 5 மணிக்கு, தோழர் தர்மலிங்கம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் டி. கே. சீனிவாசன், திருச்சி மதிவாணன் ஆகியோர் பேசுவர்.

# கழகக் கூட்டம்

★

**நீடாமங்கலம்**

**சீனிவாசப் பிள்ளை சத்திரத்திற்கு எதிரில்**

**17—1—55 மாலை 6 மணிக்கு**

தலைவர்: பெத்தண்ணா

பேசுவோர்:

இரா. நெடுஞ்செழியன்

இராசகோபால்

---

### புதுவை

15—1—55 சனி மாலை 6 மணியளவில் புதுவை ஒதியஞ்சாலை மைதானத்தில், தோழர் ச. சிவப்பிரகாசம் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெறும். தோழர் இரா.நெடுஞ்செழியன் அவர்கள் "நமது குறிக்கோள்" என்னும் பொருள் பற்றிப் பேசுவார்.

ஃ ஃ ஃ

பொங்கல் விழா

16—1—55 ஞாயிறு மாலை 6 மணி முதல் தி. மு. கழகத்தில் பொங்கல் விழா (இயல்—இசை—நாடகம்) நடைபெறும்.

★

### அரிமழம்

அரிமழம் தி. மு. கழகச் சார்பில், 15—1—55 மாலை 5 மணிக்கு தோழர் இளமுருகு தலைமையில் நடைபெறும். தோழர்கள் அன்பழகன், அசோகன் தோழியர் ஆ. இராமாமிர்த அம்மையார் ஆகியோர் பேசுவர்.

---

**இரா. சு. தங்கப்பழம் தலைமையில்**

**'இரத்தக் களம்'**

15—1—55 இரவு 10 மணிக்கு, பண்ணைப்புரம் காந்திஜி அரங்கில், வல்லவராயன்பட்டி வள்ளுவர் படிப்பக நிதிக்காக, தோழர் இரா. சு. தங்கப்பழம் தலைமையில் கருணாநிதி கலாமன்றத்தினரால், 'இரத்தக் களம்' எனும் நாடகம் நடைபெறும்.

---

### திருவரங்கம்

**அறிவியக்கப் படிப்பகம்**

17—1—55 மாலை 5 மணிக்கு, திருவரங்கம், கீழவாசலில், மேற்படி படிப்பகத்தின் மூன்றும் ஆண்டு விழா தோழர் அன்பில் தருமலிங்கம் தலைமையில் நடைபெறும். தோழர் ஈ. வெ. கி. சம்பத் பேசுவார்.

---

# சைதையில் கைத்தறி விற்பனை

13—1—55 வியாழன் காலையிலிருந்து, திரு. ந. ச. செங்கல்வராயன் தலைமையில் சைதையில் இயக்கத் தோழர்கள் கைத்தறித் துணி விற்பனை செய்வர்.

---

**தி. மா. மு. க. துவக்க விழா**

16—1—55 காலை 9½ மணிக்கு துறையூர் பாரதி தியேட்டரில் திராவிட மாணவர் முன்னேற்றக் கழகத் துவக்க விழா நடைபெறும். தோழர்கள் க. அன்பழகன், எம். எஸ். மணி, க. அறிவழகன் ஆகியோர் பேசுவர்.

---

# கண்ணதாசன்

**சுற்றுப் பயணம்**

ஜன. 17 இராயபுரம்
22 சூளை
23 காலட்சேபம்
26 பெரம்பூர்
27 ஏகாம்பரகுப்பம்
30 சிதம்பரம்

---

இந்தியாவில் தொழில் துறை உற்பத்தி, 1946-ம் ஆண்டிலிருந்ததைக் காட்டிலும், 1954-ம் ஆண்டில் 40 சதவிகிதம் அதிகரித்திருந்தது.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ, அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.,

